(නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus)

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

51 T I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2016 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2016 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2016

| | | |
|---|---|---|
| නාට්‍ය හා රංග කලාව | I, II | පැය තුනයි |
| நாடகமும் அரங்கியலும் | I, II | மூன்று மணித்தியாலம் |
| Drama and Theatre | I, II | Three hours |

## நாடகமும் அரங்கியலும் I

**கவனிக்க :**
- (i) **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
- (ii) **1** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிவுசெய்க.
- (iii) **உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.**
- (iv) அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, பின்பற்றுக.

1. நாடகத்தின் சிறப்பியல்புகளிலொன்று
   (1) சொல்லாடல்களை மட்டும் அடிப்படையாகக் கொண்டது.
   (2) நடிகரைப் பிரதான ஊடகமாகக் கொண்டது.
   (3) கேட்டல் வழியாக மட்டும் பெறப்படுவது.
   (4) பெரும்பாலும் கட்புலக் கலை வடிவமாகக் காணப்படுவது.

2. பின்வருவனவற்றுள் சிறந்த நடிகர் ஒருவருக்கு வேண்டப்படுவன:
   (1) ஆர்வம், உள்ளார்ந்த ஆற்றல், மனஉறுதி, பயிற்சி என்பன
   (2) ஆர்வம், விருப்பம், பயிற்சி, தடித்த குரல் என்பன
   (3) மனஉறுதி, ஆர்வம், அழகிய உடல், பயிற்சி என்பன
   (4) பயிற்சி, மனவலிமை, அழகிய உடல், மெல்லிய குரல் என்பன

3. பின்வரும் கூற்றுக்களுள் குரற்பயிற்சி தொடர்பான **பிழையான** கூற்று எது?
   (1) இதன் மூலம் குரலின் வீச்சு, ஒலி, பண்பு ஆகியவற்றை மாற்றியமைக்கலாம்.
   (2) இதன் மூலம் குரலைக் கட்டுப்படுத்தவும் வெளிப்படுத்திக் கொள்ளவும் முடியும்.
   (3) குரற் பயிற்சியானது நடிப்பிற்கு முக்கியமானது.
   (4) குரற் பயிற்சியின் மூலம் உடற் சமநிலையை ஏற்படுத்த முடியும்.

4. ஒரு பாத்திரத்தின் பௌதீகப் பண்பினுள் அடங்குவன யாவை?
   (1) தொழில், அந்தஸ்து, சமயம் என்பனவாகும். (2) பாத்திர இயல்பு, சிந்தனை என்பனவாகும்.
   (3) பால், வயது, தோற்றம் என்பனவாகும். (4) சாதி, சமயம், வர்க்கம் என்பனவாகும்.

5. பின்வருவனவற்றுள் இசை நாடகத்துக்கு வழங்கப்படும் பெயர் **அல்லாதது**
   (1) பார்சி நாடகம் (2) ஸ்பெசல் நாடகம்
   (3) அண்ணாவி மரபு நாடகம் (4) பிரகசன நாடகம்

6. யாழ்ப்பாணத்தில் ஆரம்ப காலத்தில் இசை நாடகங்கள் ஆடப்பட்ட கொட்டகை **அல்லாதது**
   (1) புத்துவாட்டியார் மடுவம் (2) கொண்டலடி மடுவம்
   (3) றோயல் தியேட்டர் (4) ராஜா தியேட்டர்

7. நடிகமணி வி. வி. வைரமுத்துவால் அமைக்கப்பட்ட நாடக சபா
   (1) சரஸ்வதி விலாச சபா (2) வசந்தகான சபா
   (3) சுகுண விலாச சபா (4) கலைவாணி நாடக சபா

[பக். 2 ஐப் பார்க்க

8. 'ஈழத்துச் சங்கரதாஸ்' என அழைக்கப்பட்ட நாடகக் கலைஞர்
   (1) எம். வி. கிருஸ்ணாழ்வார் (2) பொன்னாலைக் கிருஸ்ணன்
   (3) செல்வரத்தினம் (செல்வம்) (4) சரவணமுத்து

9. பின்வருவனவற்றுள் நாடகத் தயாரிப்பாளரின் பணி **அல்லாதது**
   (1) நாடகத்தின் கலைத்துவம் சாரா விடயங்களுக்குத் தலைமை தாங்குதல்
   (2) நடிகர்களை ஒழுங்குபடுத்திக் கொள்ளுதல்
   (3) அனுமதிச் சீட்டுகளை விற்றல்
   (4) நாடகத்தை நெறியாள்கை செய்தல்

10. மேடை ஒளியமைப்பைக் கட்டுப்படுத்தக் கூடிய நான்கு காரணிகள்:
   (1) செறிவு, வர்ணம், திசை, அசைவு (2) செறிவு, வர்ணம், திசை, பிரகாசம்
   (3) செறிவு, வர்ணம், பிரகாசம், அடர்த்தி (4) வர்ணம், திசை, அடர்த்தி, செறிவு

11. பின்வருவனவற்றுள் மோடிமை வகை நாடகம் எது?
   (1) புதியதொரு வீடு (2) எந்தையும் தாயும் (3) சுந்தரம் எங்கே? (4) உறவுகள்

12. 'இசை நாடக மெட்டுக்கள்' எனும் இறுவட்டினை வெளியிட்ட நிறுவனம்
   (1) நாடக அரங்கக் கல்லூரி (2) திருமறைக்கலாமன்றம்
   (3) அரங்க ஆய்வுகூடம் (4) அரங்கச் செயற்பாட்டுக் குழு

13. 'என்னடி உந்தன் கோப்பியில் ஒரு துளி....' எனும் பாடல் இடம்பெற்ற நாடகம்
   (1) உயிர்த்த மனிதர் கூத்து (2) பொய்க்கால்
   (3) நாமிருக்கும் நாடு நமது (4) சக்தி பிறக்குது

14. கூத்தின் வடிவத்திற்குள் புதிய உள்ளடக்கத்தைப் புகுத்தித் தயாரிக்கப்பட்ட நாடகம்
   (1) உத்தமன் பரதன் (2) சங்காரம் (3) செஞ்சோற்றுக் கடன் (4) பாலன் பிறந்தான்

15. ஈழத்துத் தமிழ் நாடக மரபில் இயற்பண்பு சார்ந்த ஆங்கில நாடக மரபின் தாக்கத்தால் உருவாகிய சொல்லாடல் மரபைத் தோற்றுவித்தவர்
   (1) கா. சிவத்தம்பி (2) கலையரசு சொர்ணலிங்கம்
   (3) இளைய பத்மநாதன் (4) செல்வரட்ணம்

16. க. கணபதிப்பிள்ளை அவர்களால் எழுதப்பெற்ற வரலாற்று நாடகம்
   (1) மாணிக்கமாலை (2) துரோகிகள் (3) சங்கிலி (4) உடையார் மிடுக்கு

17. பின்வருவனவற்றுள் நா. சுந்தரலிங்கத்தின் நாடகம் **அல்லாதது**
   (1) விழிப்பு (2) அபசுரம் (3) பம்மாத்து (4) ஒளி பிறந்தது

18. ஈழத்துத் தமிழ் நாடக வரலாற்றில் 1970களில் தோன்றிய அரங்க நிறுவனம்
   (1) நாடக அரங்கக் கல்லூரி (2) அரங்காடிகள் குழு
   (3) நடிகர் ஒன்றியம் (4) அவைக்காற்று கலைக்கழகம்

19. பின்வரும் கூற்றுக்களுள் அ. தாசீசியஸ் பற்றிய சரியான கூற்று
   (1) யாழ்ப்பாணப் பேச்சுவழக்கை முதன்முதலாக தமிழில் கையாண்டவர்.
   (2) மரபுவழி அரங்கின் தாடனத்துடனும் ஐரோப்பிய அரங்கின் பரிச்சயத்துடனும் நெறிப்படுத்தியவர்.
   (3) மொழிபெயர்ப்பு நாடகங்களில் கூடிய கவனம் செலுத்தியவர்.
   (4) அரங்குசார் தொழினுட்பங்களுக்கு அதிக முக்கியத்துவமளித்தவர்.

20. பின்வரும் கூற்றுக்களைக் கருதுக.
   - இவர் கூத்து மொழியை அரங்கியலாக்கியவர்.
   - மொழிபெயர்ப்பு நாடகங்கள் ஊடாகத் தமிழ் அரங்கு சர்வதேச மட்டத்தில் பார்க்கப்படுவதற்குத் தூண்டுதலளித்தவர்.
   - இவர் அரங்கினூடாக ஜனநாயக அரசியலைத் தேடியவர்.

   மேற்கூறிய கூற்றுக்களுடன் தொடர்புடையவர்கள் முறையே,
   (1) வித்தியானந்தன், கலையரசு சொர்ணலிங்கம், இ. சிவானந்தன்
   (2) க. பாலேந்திரா, மாவை நித்தியானந்தன், ஆனந்தராணி
   (3) சி. மௌனகுரு, க. பாலேந்திரா, க. சிதம்பரநாதன்
   (4) சி. மௌனகுரு, ஏ. ரி. பொன்னுத்துரை, க. பாலேந்திரா

21. இ. சிவானந்தன் அவர்களால் எழுதப்பெற்ற அரங்கியல் நூல்
   (1) ஈழத்துத் தமிழ் நாடக வரலாறு (2) வட இலங்கை நாட்டார் அரங்கு
   (3) இலங்கைப் பல்கலைக்கழகத் தமிழ் நாடக அரங்கு (4) ஈழத்துத் தமிழ் நாடக வளர்ச்சி

[பக். 3 ஐப் பார்க்க

22. 'புதியதொரு வீடு' நாடகத்தின் பிரதான மோடி
(1) யதார்த்த மோடி ஆகும்.
(2) அபத்த மோடி ஆகும்.
(3) யதார்த்த விரோத மோடி ஆகும்.
(4) கற்பித மோடி ஆகும்.

23. புதியதொரு வீடு நாடகத்தில் இடம்பெறும் பிரதான மோதுகை யாது?
(1) இளைஞர்களுக்கும் பெற்றோருக்குமிடையிலான பிரச்சினை
(2) வேலையில்லாதோருக்கும் அரசுக்குமிடையிலான போராட்டம்
(3) இயற்கைக்கும் மனிதனுக்குமிடையிலான போராட்டம்
(4) தர்மத்திற்கும் அதர்மத்திற்குமிடையிலான போராட்டம்

24. நாடக நெறியாளரின் பிரதான பணி
(1) அரங்க வெளியைத் தெரிவுசெய்தல்
(2) நாடகத்தை முகாமை செய்தல்
(3) நடிகரைத் தெரிவுசெய்தலும் நடிபாகமளித்தலும்
(4) மேடையை நிர்வாகம் செய்தல்

25. வேட உடையும் ஒப்பனையும் அடங்குவது
(1) உடல்வழிச் சித்திரிப்பில்
(2) குரல் வழிச் சித்திரிப்பில்
(3) உணர்ச்சி வழிச் சித்திரிப்பில்
(4) காண்பிய வழிச் சித்திரிப்பில்

26. அரங்கப் பொருட்கள் எனப்படுவது யாது?
(1) அரங்க அலங்காரப் பொருட்களாகும்.
(2) நடிகர்களின் ஆடை அணிகளாகும்.
(3) நடிகர்கள் மேடையில் பயன்படுத்தும் பொருட்களாகும்.
(4) ஒளிப் பொருட்களாகும்.

27. நாடகத்தில் உடல் அசைவுகளின் பயன்பாடு யாது?
(1) மேடையில் இடங்களைச் சுட்டிக்காட்டுதல்
(2) என்ன நாடகம் என எடுத்துக்காட்டுதல்
(3) பாத்திர உணர்வுகளை எடுத்துக்காட்டுதல்
(4) நாடகத்திற்கு வலுவூட்டுதல்

28. உடற்பயிற்சிக்கு அழுத்தம் கொடுக்கும் அரங்க விளையாட்டு
(1) குருட்டு ஆட்டோ
(2) ஆடும் வீடும்
(3) கோழி கோட்டான்
(4) சின்னப்பானை பெரியபானை

29. பின்வருவனவற்றுள் வேடமுகம் **பயன்படுத்தப்படாத** சிங்கள நாடக மரபு
(1) கோலம் (2) சொக்கறி (3) தொவில் (4) நூர்த்தி

30. உலகளாவிய ரீதியில் நாடக அரங்கம் பற்றி வெளிவரும் தமிழ் மொழி மூலமான இதழ்
(1) கூத்தரங்கம் (2) கட்டியம் (3) ஆற்றுகை (4) நிகழ்கலை

31. பின்வருவனவற்றுள் நாடக விமர்சனத்திற்குப் பொருந்தாதது எது? / எவை?
(1) நேர்மையும் பயமின்மையும்
(2) நாடகம் பற்றிய அறிவு
(3) பக்கச்சார்பின்மை
(4) புகழ்ச்சியும் குறை கூறுதலும்

32. மாருதப் புரவீகவல்லி என்ற நாடகத்தை எழுதியவர்
(1) முல்லைமணி
(2) கந்தவனம்
(3) சொக்கன்
(4) தேவன்

33. இசை நாடகத்தின் மூலம் அறியப்பட்ட நாடக நடிகர்
(1) எம். வி. கிருஸ்ணாழ்வார்
(2) கணபதிப்பிள்ளை (சின்னமணி)
(3) பொன்னாலைக் கிருஸ்ணன்
(4) அரியாலைச் செல்வம்

34. பேராசிரியர் சு. வித்தியானந்தனின் கூத்துப் புத்தாக்கச் செயற்பாட்டுக்கு உதவியாக இருந்த அண்ணாவியார்
(1) நாகமணிப்போடி
(2) செல்லையா
(3) சீனித்தம்பி
(4) பாலகப்போடி

[பக். 4 ஐப் பார்க்க

10548

35. பின்வரும் படங்களில் காட்டப்பட்டுள்ளவை,





(1) கிராமிய ஆட்டங்கள் ஆகும்.
(2) சாஸ்திரிய நடனங்கள் ஆகும்.
(3) நவீன நாடகங்கள் ஆகும்.
(4) கிராமியச் சடங்குகள் ஆகும்.

36. படத்தில் காட்டப்பட்டுள்ள முக ஒப்பனை எந்த மிருகத்தைக் குறிக்கும்?



(1) நரி
(2) குதிரை
(3) புலி
(4) யானை

- கீழே A, B, C, D ஆகியவற்றினால் குறிப்பிடப்பட்டுள்ளவர்களின் படங்களை ஆதாரமாகக் கொண்டு **37** தொடக்கம் **39** வரையுள்ள வினாக்களுக்கு விடையளிக்குக.


A


B


C


D

37. புதியதொரு வீடு நாடகத்தை முதலில் நெறியாள்கை செய்தவரைக் குறிக்கும் எழுத்து யாது?
(1) A (2) B (3) C (4) D

38. நாடக அரங்கக் கல்லூரியைத் தோற்றுவித்தவரைக் குறிக்கும் எழுத்து யாது?
(1) A (2) B (3) C (4) D

39. மொழிபெயர்ப்பு நாடகங்களை நெறியாள்கை செய்தும் நடித்தும் புகழ் பெற்றவர் எவ்வெழுத்தினால் குறிப்பிடப்பட்டுள்ளார்?
(1) A (2) B (3) C (4) D

40. இங்கு படத்திற் காட்டப்பட்டுள்ள வாத்தியம் யாது?



(1) உடுக்கை
(2) முரசு
(3) டோல்கி
(4) மத்தளம்

* *

නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus



NEW **51 T I, II**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2016 දෙසැම්බර්
**கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2016 டிசெம்பர்**
**General Certificate of Education (Ord. Level) Examination, December 2016**

නාට්‍ය හා රංග කලාව **I, II**
**நாடகமும் அரங்கியலும்** **I, II**
Drama and Theatre **I, II**

## நாடகமும் அரங்கியலும் II

※ **முதலாம்** வினாவுக்கும் ஏனையவற்றுள் எவையேனும் **நான்கு** வினாக்களுக்குமாக மொத்தம் **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.

**1.** சுருக்கமான விடை எழுதுக.

(i) வானொலி நாடகத்தின் பிரதான இயல்பு யாது? (01 புள்ளி)

(ii) அரங்க விளையாட்டு என்றால் என்ன? (01 புள்ளி)

(iii) நடிப்பு நுட்பங்களில் புதிதளித்தல் என்பதன் மூலம் கருதப்படுவது யாது? (01 புள்ளி)

(iv) யதார்த்த ஒப்பனை என்றால் என்ன? (01 புள்ளி)

(v) நியமமில் அரங்கில் நடிகரைத் தெரிவதற்குப் பயன்படுத்தப்படும் நுட்பங்களில் **இரண்டைக்** குறிப்பிடுக. (01 புள்ளி)

(vi) நடிகரின் பௌதீக குணாம்சங்களுக்கு ஓர் உதாரணம் தருக. (01 புள்ளி)

(vii) நாடக ஒத்திகையில் வெள்ளுடுப்பு ஒத்திகை என்பதால் கருதப்படுவது யாது? (01 புள்ளி)

(viii) 'தப்பு' இசைக்கருவி பிரதானமாகப் பயன்படுத்தப்படும் கூத்து மரபு யாது? (01 புள்ளி)

(ix) கிருஸ்ணாழ்வாருக்குப் புகழூட்டிக் கொடுத்த பெண் பாத்திரங்கள் **இரண்டைப்** பெயரிடுக. (02 புள்ளிகள்)

(x) எழுத்துரு ஒன்றில் இடம்பெறும் 'ஒளி நினைவுக் குறிப்பு' (Lighting Que) என்றால் என்ன? (02 புள்ளிகள்)

**2.** (i) அரங்கவெளி என்றால் என்ன? (03 புள்ளிகள்)

(ii) பின்வரும் ஆற்றுகை வடிவங்களுக்குரிய அரங்கவெளிகளைக் குறிப்பிடுக.

(அ) கூத்து
(ஆ) சொக்கறி
(இ) கோலம
(ஈ) நாடகம் (04 புள்ளிகள்)

(iii) பருமட்டான படச்சட்ட அரங்கு ஒன்றை வரைந்து, அவ்வரங்கின் பகுதிகளையும் விளக்கத்திரை/வான்திரை அமைந்திருக்கும் பகுதிகளையும் குறித்துக் காட்டுக. (05 புள்ளிகள்)

**3.** "சமகால வாழ்வினைப் பிரதிபலிக்கும் இலக்கியங்களில் சிறுகதை, நாடகம் ஆகிய எழுத்துருக்கள் முதன்மையானவை"

(i) சிறுகதைக்கும் நாடகத்திற்குமிடையே காணப்படும் ஒற்றுமைகள் **மூன்றினைத்** தருக. (03 புள்ளிகள்)

(ii) நாடக எழுத்துரு ஒன்றின் பண்புகள் **மூன்றினைக்** குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(iii) மேற்குறிப்பிட்ட பண்புகளை அடிப்படையாகக் கொண்ட குடும்பப் பிரச்சினை அல்லது சூழலியற் பிரச்சினை ஒன்றினைத் தெரிவுசெய்து, நாடக எழுத்துரு ஒன்றை ஆக்குக. (06 புள்ளிகள்)

[பக். 6 ஐப் பார்க்க

4. "கூத்துக்கள் தமிழ் மக்களின் மரபு வழியான நாடக வடிவங்கள் ஆகும்."

(i) பின்வரும் கூத்துக்கள் பயிலப்படும் பிரதேசங்களைக் குறிப்பிடுக.

(அ) பறைமேளக் கூத்து
(ஆ) வட பாங்கு
(இ) நாட்டை
(ஈ) கோவலன் கூத்து
(உ) அருச்சுனன் தபசு
(இ) மகிடிக் கூத்து (04 புள்ளிகள்)

(ii) மேலே (i) இல் குறிப்பிடப்பட்டுள்ள கூத்துக்களில் எவையேனும் **இரண்டின்** ஆற்றுகை மரபுகளை விளக்குக. (08 புள்ளிகள்)

5. (i) ம. சண்முகலிங்கத்தின் **ஆரொடுநோகேன்** நாடகத்தின் பிரதான கரு யாது? (02 புள்ளிகள்)

(ii) இக்கரு ஊடாகப் பேசப்படும் கதை யாது? (02 புள்ளிகள்)

(iii) இந்நாடகத்தில் இடம்பெறும் ஏதேனும் **இரண்டு** பாத்திரங்களைக் குறிப்பிட்டு, அவற்றின் இயல்புகள் பற்றி விளக்குக. (04 புள்ளிகள்)

(iv) இந்நாடகத்தின் இறுதிக் காட்சிக்காக எவ்வாறு பொருட்களை ஒழுங்குபடுத்தலாம் என்பது பற்றி விளக்குக. (04 புள்ளிகள்)

6. (i) அரங்கப் பயிற்சிகள் என்றால் என்ன? (03 புள்ளிகள்)

(ii) 'உடல் சார்ந்த பயிற்சிகளின் முக்கியத்துவம்' எனும் தலைப்பிலான ஒரு சுவரொட்டிக்கான குறிப்புக்களை எழுதுக. (03 புள்ளிகள்)

(iii) பின்வருவன பற்றிச் சுருக்கமாக விளக்குக.

(அ) மெய்நிலைப் பயிற்சி
(ஆ) பரப்புக்கள் சார்ந்த பயிற்சி
(இ) சமநிலை சார்ந்த பயிற்சி (06 புள்ளிகள்)

7. "நாடகத்தின் உந்து சக்தியாகத் திகழ்வோர் பார்ப்போராவர்."

(i) ஓர் அரங்கில் பார்ப்போரின் முக்கியத்துவம் பற்றி விளக்குக. (03 புள்ளிகள்)

(ii) நாடக எழுத்துரு நயத்தலுக்கும் நாடக ஆற்றுகை நயத்தலுக்குமிடையிலான வேறுபாடுகள் **மூன்றினைக்** குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(iii) நீர் பார்த்த ஏதேனுமொரு நாடகம் பற்றிய விமர்சனம் ஒன்று எழுதுக. (06 புள்ளிகள்)

* * *